# பகவத் பாதை

BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 8 | இதழ் 1 | ஜூலை 10, 2021 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 8 | Issue 1 | July 10th, 2021 | Annual Subscription Rs. 100/-

## புதிய உலகம் படைப்போம்



## இரண்டாம் தர மனித வாழ்வு


கணப்பொழுதில் தோன்றி முடிந்துபோன நமது உணர்வுகளை, இருப்பதாக எண்ணி அதனுடைய நிழலை நிர்வாகம் செய்ய முயல்வதுதான் நமது அகப் போராட்டங்களாகும்.

அதனோடு போராடுவது என்பது நெருப்பை நிர்வாகம் செய்வதாக எண்ணி அதனுடைய புகையை நிர்வாகம் செய்ய முயல்வது போன்றது தான்.

# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

ஞானியர் அனைவருக்கும் இந்த சகபயணியின் வணக்கம்.

நமது பகவத் பாதையின் ஜுன் மாத இதழ் கொரானா ஊரடங்கால் அச்சிட முடியவில்லை என்பதை தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் தற்போது ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நேரடி ஞான முகாம் நடத்த முடியாத இந்த சூழலில் Zoom meeting வழியாக மே மாதம் 17ஆம் தேதி முதல் 19ஆம் தேதி வரை, 21ஆம் தேதி முதல் 23ஆம் தேதி வரை, 28ஆம் தேதி முதல் 30ஆம் தேதி வரை என மூன்று ஞான முகாம்களும், ஜுன் மாதத்தில் 4ஆம் தேதி முதல் 6ஆம் தேதி வரை நான்காவது ஞான முகாமும் நடைபெற்றன.

முதல் ஞான முகாமை ZOOM Meeting வாயிலாக ஆரம்பித்தபோது, இது நேரடி ஞான முகாம் அளவுக்கு பயனுள்ளதாக இருக்காதோ என்று எண்ணினோம். ஆனால் Zoom meeting வழியாக நடத்திய ஞான முகாம் நாம் எதிர்பார்த்ததைவிட மிகவும் பயனுள்ளதாக இருந்தது. கலந்து கொண்ட அனைவருக்கும் 100% பயனுள்ளதாக அமைந்தது. அதன் காரணமாகவே தொடர்ந்து நான்கு முகாம்களும் நடத்தப்பட்டன.

ஞான முகாமில் கலந்துக்கொண்ட ஒரு கல்லூரி மாணவி தனது அனுபவத்தைப் பகிர்ந்து கொள்ளும்போது "நீங்கள் கூறும் மனதைப் பற்றிய ஞானப் புரிதல், தற்போது பலரும் பாதிப்படைந்திருக்கும் OCD (Obsessive Compulsive Disorder) எனும் மன நோய்க்குகூட தீர்வாக அமைகிறது" என்று கூறினார்.

OCD என்றால் என்னவென்றே நமக்குத் தெரியாத நிலையில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் ஞானப் புரிதல் பலருக்கும் OCD பிரச்சினைகளில் இருந்து வெளிவரத் தீர்வாக அமைகிறது.

மனப் பிரச்சினை எத்தனையோ வகையாக இருக்கலாம், எந்தப் பெயருடனும் இருக்கலாம். ஐயா வழங்கும் இப் புரிதல் ஒன்றே அனைத்துக்கும் நிரந்தரத் தீர்வாக அமைகிறது.

எனவே இதனைத் தொடர்ந்து OCD- யை மையமாக வைத்து, அவர்கள் எளிதாக புரிந்துகொண்டு விடுபடுமாறு ஐந்து ZOOM Meeting தமிழிலும், ஒன்று ஆங்கிலத்திலும் நடை பெற்றது.

இந்த சத் சங்கங்களை அனைவரும் பயனடையும் வகையில் YOUTUBE -லும் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன.

இதனைப் பார்த்த பலரும் இதனை இன்னும் விரிவான முகாமாக நடத்துமாறு தங்களது கோரிக்கைகளை வைத்துள்ளனர்.

விரைவில் OCD பிரச்சினைகளை மையமாக வைத்து ஓர் ஞான முகாம் நடத்தவும் எண்ணியுள்ளோம்.

ஸ்ரீ பகவத் ஐயா வழங்கும் ஞானப் புரிதல் ஆன்மிகத்தின் உயர்ந்த நிலையான ஞானம், விடுதலையைப் பெறுவதற்காக மட்டுமல்லாமல் மனப் பிரச்சினையால் பாதிக்கப்பட்ட அனைவருக்கும் மிகவும் பயனுள்ள வகையில் தீர்வாகவும் இருக்கிறது. மன ஆரோக்கியமே மனித குலத்துக்கு முதன்மையானது. அக விடுதலையே மன ஆரோக்கியம்.

எனவே மனப் பிரச்சினையால் பாதிக்கப்பட்டவர்களுக்கு மட்டுமல்லாது மனித குலத்துக்கே இப் புரிதல் மிகவும் அத்தியாவசியமானது.

அனைவருக்கும் பகிர்ந்து ஆரோக்கியமான சமுதாயத்தை, நல்ல எதிர்காலத்தை உருவாக்க உதவுமாறு வேண்டுகிறோம்.

ஞானத்தைப் புரிந்து கொள்வோம்...
புரிதலைப் பகிர்ந்து கொள்வோம்...

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com
V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555
This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075





# இரண்டாம் தர மனித வாழ்வு

- ஸ்ரீ பகவத்

நமது பாதையில் பயணிக்கும் பலரும் மனதில் உள்ள சுமைகள் அனைத்தையும் இறக்கிவைத்துவிடுகின்றனர்.

பலருக்கு நல்ல விதமான மன அனுபவங்களுங்கூடக் கிடைத்துவிடுகின்றன.

நல்ல மன அனுபவங்கள் கிடைக்கும்போது நாம் என்ன செய்வோம்?

அந்த நல்லவிதமான மன அனுபவங்கள் ஏற்படுவதற்கு,

ஒருவருக்கு நல்லவிதமான சூழ்நிலைகளும் அவரது முயற்சிகளில் வெற்றியும் ஏற்பட்டதுகூடக் காரணமாக இருக்கலாம்.

அல்லது நமது பாதையில் பயணிப்பது மட்டுமேகூட காரணமாக இருக்கலாம்.

என்ன காரணமாக இருந்தாலும் சரி,

இப்போது நமக்கு நல்லவிதமான மன அனுபவங்கள் ஏற்படுகின்றன.

இத்தகைய அனுபவங்கள் நமக்கு ஏற்படும்போது நாம் என்ன செய்வோம்?

"இந்த அனுபவம் மிகவும் நன்றாக இருக்கிறது. இது என்னை விட்டுப் போய்விடக்கூடாது. இது என்னிடமே தங்கியிருக்க வேண்டும்."

–இதைப் போன்ற ஓர் உணர்வு நமக்கு ஏற்பட்டுவிடும்.

நாமாக விரும்பி ஏற்படுத்தாவிட்டாலும், இது நம்மை அறியாமல் நமக்குள் ஏற்பட்டுவிடும்.

–இதுதான் நமது மனதின் இயல்பு.

–நம் மனதின் இயற்கை.

அடுத்து என்ன ஏற்படுகிறது?

இது நம்மை அறியாமல் ஏற்பட்ட ஓர் எதிர்பார்ப்பாக அமைந்து,

"எதிர்பார்க்கும் ஆற்றலாக" செயல்பட்டு விடுகிறது.

பிரவாகமாக ஓடி மறைந்துவிடும் நமது மன இயக்கங்களுக்கெல்லாம்

இது ஒரு பிரேக்காக அமைந்துவிடுகிறது.

நிறுத்தி வைப்பதுதான் பிரேக்கின் வேலை. பிடித்து வைப்பதுதான் பிரேக்கின் வேலை.

நமக்கு ஏற்பட்ட நல்ல அனுபவங்கள் யாவும் நீடித்திருக்க வேண்டும்; நம்மிடமே தங்கிவிட வேண்டும் என்பதுதான்

–நிறுத்தி வைக்கும் வேலை.

–பிடித்து வைக்கும் வேலை.

–பிரேக்கின் வேலை.

இதனால் பிரவாகத்தில் ஒரு தடங்கல் ஏற்பட்டு விடுகிறது. அதுவும் நம்மை அறியாமல் ஏற்பட்டுவிடுகிறது.

மகிழ்ச்சியான – இன்பமான நிகழ்வுகள் நடந்திடும்போது நமது மன இயக்கத்தில் இத்தகைய – பிரேக்குகள் – எதிர்பார்ப்புகள், ஏற்பட்டுவிடுகின்றன.

நமது வாழ்க்கை எப்போதுமே வசந்த காலமாக இருந்துவிடுவதில்லை. காற்றடிக்கும் திசை அடிக்கடி மாறிவிடும்.

துன்பம் மற்றும் பிரச்சினைக்குரிய உணர்வுகளைத் தூண்டும் பலவிதமான சூழ்நிலைகளும் ஏற்பட்டுவிடும்.

நாம் செய்யும் தொழில்களில் சில சிக்கல்கள் ஏற்பட்டுவிடலாம். உறவுகளுக்கிடையே சில முரண்பாடுகள் ஏற்பட்டுவிடலாம்.

விளைவாக,

நமது மனதில் துன்பத்தின் அலை, அடுக்கடுக்காக ஏற்பட்டுவிடும்.

இப்போது நாம் என்ன செய்கிறோம்?

துன்பமான சூழ்நிலைகளிலிருந்தும் துன்பமான மன அலைகளிலிருந்தும் விடுபட்டு விடவேண்டும் என்ற ஓர் எதிர்பார்ப்பு இங்கேயும் நம்மை அறியாமல் ஏற்பட்டுவிடுகிறது.

எந்தத் தன்மையில் அது இருந்தாலும் சரி, எதிர்பார்ப்புகள் அனைத்தும் பிரேக்குகளாகவே செயல்பட்டுவிடுகின்றன.

இன்பங்கள் ஏற்படும்போது அவற்றை பிடித்துவைத்திட இந்த பிரேக்குகள் முற்படுகின்றன என்று பார்த்தோம்.

ஆனால் துன்பங்கள் ஏற்படும்போது நாம் அவற்றை பிடித்து வைத்திட முற்படுவது இல்லையே?

பிறகு இந்த பிரேக் எப்படி அங்கே வேலை செய்கிறது?

துன்பங்களின் பிடியில் மாட்டிக் கொள்ளாமல் நம்மை பாதுகாப்பாக தனிமைப்படுத்தி பிடித்து வைக்க

–இந்த பிரேக்குகள் செயல்பட்டுவிடுகின்றன.

–இந்த எதிர்பார்ப்புகள் செயல்பட்டு விடுகின்றன.

விளைவாக,

இங்கும் பிரவாகம் செயல்படுவதில் தடங்கல் ஏற்பட்டு விடுகின்றது.

இந்தத் தடங்கல் நம்மையறியாமல் ஏற்பட்டு விடுகின்றது.

பிரவாகம் செயல்படும்போது மட்டுமே முக்தி செயல்படுகின்றது; விடுதலை செயல்படுகின்றது.

பிரவாகத்தில் தடங்கல் ஏற்படும்போது தேக்கநிலை ஏற்பட்டுவிடுகின்றது அல்லது சுழல்கள் ஏற்பட்டுவிடுகின்றன.

மன இறுக்கங்களும் சுயமுரண்பாடுகளும் போராட்டங்களும் ஏற்பட்டுவிடுகின்றன.

பிரவாகம் மட்டுமே உயிருள்ள இயக்கமாகும்.

உயிருள்ள இயக்கத்தில் மட்டுமே புதுப்பித்தலும் புதுப் பொலிவும் இருக்க முடியும்.

இந்த மன இறுக்கங்களில் இருந்து எவ்வாறு விடுபடுவது?

ஏற்கனவே சிந்தனை மற்றும் சிந்தித்தல் (Thought & Thinking) பற்றி பார்த்திருக்கிறோம்.

சிந்தனை மட்டும் அல்லாமல் நமது எல்லா விதமான மன இயக்கங்களும் மன உணர்ச்சிகளும் இரண்டு விதமான அடுக்குகளாகவே அமைந்துள்ளன.

தாமாக ஏற்படுவதை சிந்தனை என்றும் நாமாக சிந்திப்பதை சிந்தித்தல் என்றும் இரண்டு விதமாக இதனை வகைப்படுத்தியிருக்கிறோம்.

நமது மன உணர்ச்சிகளும் இவ்வாறு நம்மை அறியாமல் ஏற்பட்டு விடுகின்றன.

அவையும் ”நம்மையறியாமல் ஏற்பட்ட உணர்ச்சி”, ”நாமாக நிர்வாகம் செய்யும் உணர்ச்சி” – என இரண்டு அம்சங்களாக இருந்து செயல்படுகின்றன.

பயப்படக்கூடாது, வருத்தப்படக்கூடாது என நாம் முடிவு எடுத்திருப்போம். அதையே நாமும் விரும்புவோம்.

ஆனால் நமது எதிர்பார்ப்புகளையும் முடிவுகளையும் மீறி பயமோ அல்லது வருத்தமோ நமக்கு ஏற்பட்டுவிடும்.

– நம்மை அறியாமல் ஏற்பட்டுவிடும்.

அது வந்த பிறகுதான் வந்ததே தெரியும்.

பளீரென மின்னல் வெட்டி மறைந்து விடுகிறது.

அது மறைந்து போன சில வினாடிகளுக்குப் பிறகே இடியோசை கேட்கிறது.

ஓசை கேட்கும் போது இடி என்று எதுவுமே கிடையாது.

உண்மையான இடி என்பது அந்த மின்னலை மட்டுமே குறிக்கின்றது.

ஆனால் நாம் மின்னலை மின்னல் என்று தான் கூறுவோம். மின்னல் வெட்டுகிறது என்றுதான் கூறுவோமேயொழிய, இடி இடிக்கிறது என்று கூறுவதில்லை.

இடி ஓசையைத்தான், இடிமுழக்கம் என்று கூறுவோம்.

ஆனால் ஓசையைக் கேட்கும் அந்த நிலையில் இடி என்று எதுவுமே கிடையாது.

இப்படியே, நமக்கு ஏற்படும் பயம் மற்றும் வருத்தங்கள் யாவும் மின்னலாகதான் தோன்றி

மறைகின்றன.

அவை அனைத்தும் நம்மை அறியாமல் ஏற்பட்டவை.

அவையாவும் "**அறியா உணர்வுகள்**".

அறியா உணர்வுகள் யாவும் அவை மறைந்த மறு கணத்தில் "**அறிந்த உணர்வுகளாக**" மாறிவிடுகின்றன.

அறியா உணர்வுகள் மட்டுமே மின்னலைப் போன்றவை; உண்மையானவை.

அறிந்த உணர்வுகள் அனைத்தும் இடி ஓசையைப் போன்றதே; இல்லாதவையே.

நமக்குள் கோபமோ, ஆத்திரமோ, மகிழ்ச்சியோ அலையாகப் பொங்கி வருவதைப் பார்த்திருப்போம்.

கணநேரத்தில் பொங்கி வந்த அந்த அலை, பொங்குவதிலிருந்து விடுபட்டுவிடும். அவையனைத்தும் நம்மை அறியாமலேயே பொங்குகிறது.

அவை பொங்குவதிலிருந்து விடுபட்ட நிலையிலேயே

–அவை மறைந்த நிலையிலேயே அவற்றை நாம் அடையாளம் கண்டு புரிந்து கொள்கிறோம்.

"**அலையாக வந்தவை எல்லாம் அறியா உணர்வே**" அலையாகவந்தவை மறைந்த நிலையிலேயே அவை "**அறிந்த உணர்வாக**" மாறுகின்றன.

நமது மன இயக்கத்தின் முதல் நிலை "**அறியா உணர்வே**".

"**அறிந்த உணர்வு**" என்பது நம் மன இயக்கத்தின் இரண்டாம் தரமான அம்சமே.

–இரண்டாம் நிலையே.

இந்த முதலாவது இயக்கம் நமக்குள்ளேயே ஏற்பட்டாலும் அது நம்மை அறியாமலேயே ஏற்பட்டுள்ளது.

ஆகவே அது நமது இயக்கம் அல்ல.

அது இயற்கையின் இயக்கம்.

–இறைவனின் இயக்கம்.

அதனை அடுத்த இரண்டாந்தரமான இயக்கம்தான்,

–அறிவுபூர்வமான (Conscious) இயக்கம்தான் நமது இயக்கம்.

இதுவே மனதின் இயக்கம்.

இதுதான் செயற்கையான இயக்கம்.

முடிந்துபோன ஒன்றை நிர்வாகம் செய்வதாக எண்ணி அதனுடைய நிழலை நிர்வாகம் செய்ய முயல்வதுதான் நமது அகப் போராட்டங்களாகும்.

நெருப்பை நிர்வாகம் செய்வதாக எண்ணி அதனுடைய புகையை நிர்வாகம் செய்ய முயல்வதுதான் நமது அகப் போராட்டங்கள் ஆகும்.

நாம் இப்போது செய்ய வேண்டுவது என்ன?

நாமாகச் செயல்படும் நமது மனதின் "இரண்டாந்தரமான" தன்மையைப் புரிந்து கொள்ள வேண்டும்.

நம்மை அறியாமல் நிகழ்வதுதான் நமது மொத்தமான மனதின் (Total Mind) பிரதானமான செயல்பாடு.

அங்கு, "மனம், புத்தி, சித்தம், அகங்காரம்" என்னும் நமது மனதின் மொத்த அம்சமும் ஒன்றாகச் சேர்ந்து மொத்தமாகச் செயல்பட்டுள்ளது.

இதுதான் நமது பிரதானமான செயல்பாடு. இதுதான் நம்மை அறியாமல் ஏற்படும் இயற்கையின் செயல்பாடு.

நாமாகச் செயல்படுவது என்பது நமது மனதும் அகங்காரமும் மட்டும் இணைந்து செயற்கையாகச் செயல்படுவதாகும்.

இந்த இரண்டாவது பகுதி எவ்வாறு செயல்பட வேண்டும்?

இதற்கு இரண்டு விதமான பணிகள் உள்ளன.

முதலாவது பகுதியை இறைவன் எனக் கருதி அதற்கு மரியாதை செலுத்துவது தான் இந்த இரண்டாவது பகுதியின் முதலாவது பணி.

அதனுடைய இரண்டாவது பணி?

புற வேலைகளில் ஈடுபட்டுச் செயல்படுவது. – இதுதான் அதனுடைய இரண்டாவது பணி.

இரண்டாவது பணியை செயல்படுத்துவது என்பது எவ்வாறு?

நாம் டைப் ரைட்டரில் டைப் செய்கிறோம். விரல்கள் மூலம் பட்டன்களை இயக்குகிறோம்.

விரல்கள் டைப் செய்வதாகத் தோன்றினாலும் விரல்களின் செயல்பாட்டுக்கு நாம்தான் காரணம்.

விரல்களுடைய தகுதியில் இருந்து இயக்கப்படும் ஒன்றாக இருந்து புற வேலைகளில் ஈடுபடுவது மட்டுமே இந்த இரண்டாவது பகுதியின் இரண்டாவது பணியாகும்.

★




K.S. ஜீவமணி
செல் : 97891 65555

# கேள்வி பதில்...

## நிகழ்காலத்தில் வாழ்வது என்றால் என்ன ?

**கேள்வி** : ஆன்மிகத்தில் நிகழ்காலத்தில் வாழ்தல் என்பது பற்றி சிறப்பாகக் கூறப்படுகிறது. ஆனால் யதார்த்தத்தில் எல்லா நேரங்களிலும் நம்மால் அப்படி இருக்க முடியவில்லை. மனம், நடந்து முடிந்த நிகழ்வு பற்றியும் எதிர்கால பயத்திலும் அடிக்கடி அலைபாய்ந்து கொண்டுதான் இருக்கிறது. எவ்வளவு முயன்றும் மனதை தொடர்ந்து நிகழ் காலத்தில் வைத்திருக்க முடியவில்லை. பல நேரங்களில் மனம் நமது முயற்சியையும் மீறி வேறு சிந்தனைக்குச் சென்று விடுகிறது. எப்படி தொடர்ந்து நிகழ் காலத்தில் வாழ்வது? இது எப்படி சாத்தியம்?

**பதில்** : ஆன்மிகத்தில் பல மகான்களும் மனம் நிகழ் காலத்தில் வாழ்வது உயர்வு என்று குறிப்பிடுகிறார்கள்.

"Live in the present moment." – என்பதற்கு முக்கியத்துவம் கொடுக்கிறார்கள்.

Eckhart Tolle என்ற ஞானியின் "The Power of Now" – என்ற நூல்கூட ஆன்மிகத்தில் மிகவும் பிரபலம்.

இறந்த காலத்தைப் பற்றிய கவலை; எதிர்காலத்தைப் பற்றிய பயம்.

– இவை இரண்டும்தான் நம்மைப் படாதபாடு படுத்துகிறது.

இதனால்தான் பல ஞானிகளும் **நிகழ்காலத்தில் வாழுங்கள்** என்று வலியுறுத்துகிறார்கள்.

நிகழ்காலத்தில் வாழ்வது என்றால் என்ன என்பதைதான் நாம் பார்க்க இருக்கிறோம்.

நேற்றைப் பற்றிய சிந்தனையோ நாளையைப் பற்றிய சிந்தனையோ இல்லாமல் இருக்க வேண்டுமா?

அதாவது "இன்று, இப்போது, இந்தக் கணம்" என்று மட்டும்தான் யோசிக்க வேண்டுமா?

இது சாத்தியமா?

மனதில் தோன்றும் எண்ணங்களும் உணர்ச்சிகளும் நமக்குக் கட்டுப்பட்டவையா?

நிகழ்காலத்தில் மட்டும்தான் இருக்கவேண்டும் என்று நாம் மனதிற்குக் கட்டளை இட முடியுமா?

அதாவது மனதில் "எனக்கு நேற்றையப் பற்றிய சிந்தனையோ நாளையைப் பற்றிய சிந்தனையோ வரக்கூடாது" என்று கட்டளை இட முடியுமா?

கட்டுப்படுத்திவிட்டீர்கள் என்றே வைத்துக் கொள்வோம்.

உங்களுக்கு நேற்றைப் பற்றிய ஞாபகமும் வரவில்லை, நாளையைப் பற்றிய சிந்தனை எதுவும் வரவில்லை என்று வைத்துக் கொள்வோம்.

இந்த கணத்தைப் பற்றி மட்டுமே சிந்தனை வருகிறது. இப்போது என்னவாகும்? உங்களால் செயல்பட முடியுமா?

உங்களுடைய அறிவு செயல்படுமா?

உதாரணத்துக்கு நாளை விடியற்காலை ரயிலில் பயணம் செய்து வெளியூருக்குச் செல்ல வேண்டும்.

ஒரு வாரத்திற்கு முன்பே முன்பதிவு செய்து டிக்கெட் எடுத்து விட்டீர்கள்.

நாளை வெளியூர் செல்ல வேண்டும் என்பதும் நினைவுக்கு வரவில்லை. ஒரு வாரத்துக்கு முன்னால் டிக்கெட் முன் பதிவு செய்ததும் நினைவுக்கு வரவில்லை என்றால் என்ன ஆகும்?

எப்படிச் செயல்படுவீர்கள்?

இவை இரண்டும் சிந்தனைக்கு வந்தால்தான் இன்று நம்மால் செயல்படவே முடியும்.

நாளை வெளியூர் செல்லத் தேவையான

துணிமணிகளை எடுத்து வைப்பது; வெளியூரில் உள்ள வேலை விஷயமாக எடுத்து வைக்க வேண்டிய டாக்குமெண்ட் ரெடி செய்வது எல்லாம் செய்ய முடியும்.

அப்படி எனில் நிகழ்காலத்தில் வாழ்வது என்பது சாத்தியமில்லாததா?

நம்முடைய அறிவுதான் நிகழ் காலத்தை நோக்கிச் செயல்பட வேண்டும்.

ஆனால் நமது அறிவின் அகத் தேடுதல்தான் நம்மை நிகழ் காலத்தில் வாழ விடாமல் தடுக்கிறது.

நிகழ் காலத்தில் இருக்க வேண்டும் என்ற நமது (அறிவின்) முயற்சிதான்

நிகழ்காலத்தில் இருந்து நழுவ வைக்கிறது.

நம்முடைய 'நிகழ்காலத்தில் வாழ வேண்டும்' எனும் முயற்சிதான் முட்டுக்கட்டையாக உள்ளது.

உண்மையைச் சொல்ல வேண்டுமென்றால் முயற்சி செய்து நிகழ்காலத்தில் வாழ முடியாது.

நாம் முயற்சி செய்யும்போதுதான் நிகழ்காலத்தையும் எதிர்காலத்திற்குக் கொண்டு சென்றுவிடுகிறோம்.

அதாவது நாம் இருக்கும் இடத்தையே அடைவிடமாக வைத்துக் கொண்டு தேடும்போது இருக்கும் இடத்தையே தவறவிடுகிறோம்.

நீங்கள் நிற்கும் இடமே நிகழ்காலம்தான் என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

நீங்கள் இருப்பதே நிகழ் காலம்தான்.

உண்மையில் நாம் நிகழ் காலத்தில் இருந்து நிகழ்காலத்துக்கு வந்து நிகழ் காலத்தை நோக்கியே பயணிக்கிறோம்.

இருப்பது நிகழ் காலம் மட்டுமே.

இருப்பதைப் புறக்கணித்தலாலேயே நிகழ்காலத்தை நழுவ விடுகிறோம்.

அப்படியெனில் நிகழ்காலத்தில் வாழ்தல் என்றால் என்ன?

**நிகழ்காலத்தில் வாழ்தல் என்பதும், அறிவு அகத்தில் குறுக்கிடாமல் புறத்தில் கவனத்தைச் செலுத்தி வாழ்வது என்பதும் ஒன்றுதான்.**

நம் மனதைப் பொறுத்தவரை முடிந்து போனவற்றைப் பற்றிய எண்ணங்கள் தோன்றலாம். இனி நடக்கப் போவதைப் பற்றியும் எண்ணங்கள் தோன்றலாம். இவை நம் கட்டுப்பாட்டில் இல்லை.

ஆனால் நமது அறிவானது அதனை நிர்வகிக்கும் எந்த வேலையும் செய்யாமல் அதனை தேவைக்குப் பயன்படுத்தி புறத்தே செயல்படுவதுதான் நிகழ்காலத்தில் வாழ்வதாகும்.

அதைவிடுத்து அறிவானது மனதில் தோன்றும் எண்ணம் உணர்வுகளோடு போராடுவதே நிகழ்காலத்தை நழுவ விடுவதாகும்.

வாழ்க்கைக்குத் தேவையான கடந்த கால அனுபவத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

எதிர்காலத்திற்குத் தேவையான திட்டங்களைத் தீட்டலாம். இவை இரண்டையும் கருத்தில் கொண்டு நிகழ்காலத்தில் தேவையான செயலை மனமொன்றி செய்வதே நிகழ்காலத்தில் வாழ்வதாகும்.

ஓர் உதாரணம் - சேலத்திலிருந்து சென்னை செல்வதாக முடிவு செய்கிறோம். ஒரு காரில் பயணிக்கிறோம். நமது இலக்கு சென்னை செல்ல வேண்டும் என்பதுதான். அதற்காகத்தான் காரில் பயணிக்கிறோம். அதற்காக சென்னையை நினைத்துக் கொண்டே இருக்க வேண்டும் என்பது அவசியம் இல்லாதது - தேவையில்லாதது. பாதையில் கவனத்தை செலுத்தி காரை சரியாக ஓட்ட வேண்டியதே சரியான செயல். இதுதான் நிகழ் காலத்தில் இருப்பது.

அறிவு நிகழ்காலத்தில்; புறத்தில் கவனத்தைத் செலுத்தி செயல்பட வேண்டும்.

இதுபோல நாம் எத்தனையோ திட்டங்களைத் தீட்டலாம். இது தவறானது கிடையாது. திட்டங்கள் தீட்டுவதற்காக எடுத்துக் கொள்ளும் நேரம் வெகு குறைவுதான்.

அதனைச் செயல்படுத்த வேண்டியது நிகழ்காலத்தில்தான். நம்முடைய கவனம் செயலில் தான் இருக்க வேண்டுமே தவிர, வெறும் திட்டத்தில் மட்டுமே தங்கி விடக்கூடாது. வெறும் திட்டத்தால் வெற்றி பெற முடியாது.

Secret என்று ஒரு நூல் வந்தது அனைவருக்கும் தெரியும். நமக்கு என்னென்ன தேவையோ அதுவெல்லாம் கிடைத்துவிட்டதுபோல் கற்பனை செய்யுங்கள். அதையும் positive ஆக சிந்தனை செய்யுங்கள் என்று கூறப்படுகிறது.

நாம் செய்யும் சிந்தனை நமது செயலைத் தூண்ட வேண்டும். அப்படி தூண்டப்பட்டு செய்யும் செயலினால்தான் விளைவு ஏற்படுமே தவிர வெறும் சிந்தனையினால் எதுவும் ஏற்படப்போவதில்லை.

ஒரு வீடு கட்ட வேண்டும் என்று நினைக்கிறோம்.

வீடு எப்படியெல்லாம் கட்ட வேண்டும்; நமது வீட்டின் ஹாலை எப்படி அமைக்க வேண்டும், Dinning எப்படி அமைக்க வேண்டும், சமையல்கட்டை எப்படி

அமைக்க வேண்டும், பூஜை அறையை எப்படி அமைக்க வேண்டும்

– என்றெல்லாம் திட்டமிடுகிறோம். நம் திட்டப்படி அமைப்பதற்கான தற்போதைய வேலை என்ன என்பதில் கவனம் செலுத்த வேண்டும். அதற்குத் தகுந்தாற்போல் அடித்தளம் எப்படி அமைப்பது என்பதில் கவனம் செலுத்தி அந்த வேலையில் ஈடுபட வேண்டுமே தவிர நமது திட்டம் நிறைவேறினால் வீடு எப்படி இருக்கும் என்று கற்பனையில் மிதக்கக் கூடாது.

**மனம் இறந்த காலத்தைக் காட்டலாம், எதிர்காலத்தையும் காட்டலாம்.**

**அறிவு அதனோடு போராடாமல் அதைப் பயன்படுத்தி நிகழ்காலத்தில் செய்ய வேண்டிய வேலையில் கவனத்தைச் செலுத்தி செயல்படவேண்டும்.**

ஞானம் பெற்று விடுதலை அடைந்தவர்கள் இப்படித்தான் செயல்படுகிறார்கள்.

வாழ்வில் – புறத்தில் எத்தனையோ அடைவிடங்களை வைத்துக் கொள்ளலாம்; நோக்கங்களை வைத்துக்கொள்ளலாம். எல்லாம் நிறைவேறிய பிறகுதான் வாழ்க்கையை இரசிப்பேன் என்று முடிவு எடுக்கக் கூடாது.

வாழ்க்கை என்பது நோக்கத்தை நோக்கிய பயணம் அல்ல.

பயணத்தையே வாழ்வின் நோக்கமாக வைத்துக் கொள்ள வேண்டும்.

வாழ்க்கையில் புறம் சார்ந்த இலக்குகள் வைத்துக்கொள்ளலாம். அவைசார்ந்து நிகழ்காலத்தில் செய்யவேண்டிய செயலில் கவனத்தை செலுத்த வேண்டும்.

நம்முடைய எல்லாச் செயலுக்கும் காரணம் தேவையில்லை. அவ்வப்போது ஓய்வாக பிடித்த வேலைகளையும் இரசித்துச் செய்ய வேண்டும்.

இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும் சுமக்காமல் – இக்கணத்தில் செய்ய வேண்டிய செயலைச் செய்வதே நிகழ்காலத்தில் வாழ்வதாகும்.

நமது புரிதலைப் புரிந்து கொண்டவர்களுக்கு இது சாத்தியமே..




# ஜென் கதை

## துறவு ஒன்று மட்டும்தான் வழி

ஒரு குடும்பஸ்தன் இருந்தான். அவன் தொழில் செய்வதற்கு மிகவும் சிரமப்பட்டான். பல ஏமாற்றங்களையும் தோல்விகளையும் சந்தித்தான். அவன் வருவாய் ஈட்டுவதற்கு மிகவும் சிரமப்பட்டான். குடும்பச் செலவுகளைக்கூட எதிர்கொள்ள முடியவில்லை. இந்த உலகத்தை மிகவும் மோசமானதாக நினைத்தான். மேலும் மனதில் வருத்தங்களும் எதிர்மறை எண்ணங்களும் தோன்றிக் கொண்டே இருந்தன. இதனால் சதா மனப் போராட்டத்துடனேயே இருந்தான்.

மனப் போராட்டத்திற்கு விடை தெரியாமல் ஓர் ஞானியைச் சந்தித்து தன் பிரச்சினையை எடுத்துக் கூறி தீர்வு கேட்டான்.

அவர் "துறவு ஒன்று மட்டும்தான் வழி" என்றார்.

அவனுக்கும் இந்த மோசமான சமுதாயத்தைத் துறந்து செல்வதே சரி என்று தோன்றியது. அவனும் வீட்டையும் குடும்பத்தையும் துறந்து காட்டுக்குப் போனான். ஆனால் அவனுக்கு சரியான உணவு, உடுத்த உடை, இருக்க இடம் என எதுவும் இன்றித் தவித்தான். எல்லாவற்றையும் துறந்தும்கூட அவனால் நிம்மதியாக இருக்க முடியவில்லை. மனப் போராட்டமும் தீர்ந்த பாடில்லை.

திரும்பவும் ஞானியை சந்தித்தான். "இப்போதும் தன் பிரச்சினை தீர்ந்தபாடில்லை. என்ன செய்வது?" என்று கேட்டான்.

"உன்னைத் துறக்கச் சொன்னது, உன் வீட்டையும் குடும்பத்தையும் இல்லையப்பா. உன் மனதைத்தான் துறக்கச் சொன்னேன். மனத்துறவு

தான் தேவை." என்றார் ஞானி.

"மனத் துறவு என்றால் என்ன சுவாமி? புரியவில்லையே?" என்றான்.

நாம் சந்திக்கும் ஒவ்வொரு சூழ்நிலையின் போதும் நம் மனம் – மனோரீதியாக ஓர் அனுபவத்தை வெளிப்படுத்துகிறது. அது முற்றிலும் இயற்கையானது. இப்படி நமக்கு இயற்கையாக ஏற்பட்ட அந்த மனோ அனுபவத்தை நல்ல அனுபவம் என்று பற்றிப் பிடிப்பதும், கெட்ட அனுபவம் என்று மாற்ற முயற்சிப்பது தான் மனப்பற்று – பந்தம். இந்த பந்தம் தான் அனைத்துப் பிரச்சனைகளுக்கும் மூல காரணம் .

இந்த மனோ அனுபவ பந்தத்திலிருந்து விடுபடுவதே மனத் துறவு" என்கிறார் ஞானி.

"மனதில் எல்லாவற்றையும் துறந்துவிட்டு பிறகு எப்படித்தான் என் வாழ்க்கையை வாழ்வது? உண்ண உணவு, உடுத்த உடை, இருக்க இடம் இதற்கெல்லாம் என்ன செய்வது?" என்றான்.

"மனதில் தோன்றும் எண்ணங்கள், உணர்வுகள், மனோ அனுபவங்கள். இவைகளில் பற்று இல்லாமல் இருக்க வேண்டும். அதாவது நமக்குப் பிடித்த எண்ணங்களும் உணர்வுகளும் அனுபவங்களும் மட்டும்தான் ஏற்படவேண்டும் என்ற பிடிவாதம் இருக்கக் கூடாது. அவை தோன்றி மறைய கூடிய நிழல்கள் போன்றவை. அவற்றை நிர்வகிக்க வேண்டிய அவசியம் எதுவும் இல்லை. எண்ணங்களையும் உணர்வுகளையும் புறச்செயலுக்குத் தேவையெனில் பயன்படுத்திக் கொள்ளலாம்." என்றார் ஞானி.

"அப்படியெனில் என் மனதை சரிசெய்வது எப்படி? என் மனதை நல்லபடியாக வைத்துக்கொள்ள வேண்டாமா?" என்றான்.

"அது இறைவனின் வேலையப்பா. இறைவன் பார்த்துக்கொள்வான். மனதை இறைவனிடம் ஒப்படைத்துவிடு. புறச் செயல்களை உன் அறிவைப் பயன்படுத்தி சிறப்பாக செய்துவிடு" என்றார் ஞானி.

அவன், "இறைவன் இப்படியொரு மோசமான உலகத்தை உருவாக்கி இருக்கிறாரே... அவர் எப்படி என் மனதைப் பார்த்துக் கொள்வார்? நானாக இருந்தால் நல்ல உலகத்தை உருவாக்கி இருப்பேன்" என்றான்.

குரு சிரித்துக் கொண்டே... "உனக்கே இப்போது காரணம் புரிந்துவிட்டது. இந்த உலகத்தை இயற்கையாக இறைவன் படைத்திருக்கிறார். மனித குலத்திற்குத் தேவையான வசதிகளை அறிவைப் பயன்படுத்தி இயற்கையை வாழ்வின் வளமாக உருவாக்கிக் கொள்ளத்தான் இறைவன் உனக்கு அறிவைக் கொடுத்திருக்கிறார். உன் மனதை நிர்வாகம் செய்ய உன்னைப் படைக்க வில்லை. ஆகவே நீ சொன்னதைச் செய்ய முயற்சி செய். நீ எதிர்பார்க்கும் உலகம் உருவாகிவிடும்" என்றார் ஞானி.

குடும்பஸ்தன் நன்கு புரிந்து கொண்டான். மனதளவில் நமக்கு எந்த வேலையும் இல்லை என்ற மனத் துறவைப் புரிந்துகொண்டு மன இயக்கத்தை இறைவனிடம் ஒப்படைத்துவிட்டு புறத்தில் தன் வாழ்வுக்குத் தேவையான வசதிகளை உருவாக்கிக் கொள்ள தன் முயற்சியைத் தொடங்கினான்.

# பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது ஒவ்வொரு மாதமும் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்பி வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் "பகவத் பாதை" தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்க்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

புதிதாக சந்தா செலுத்த விரும்புபவர்கள் இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| ஓர் ஆண்டு சந்தா | - | ரூ. 100/- |
| ஐந்தாண்டு சந்தா | - | ரூ. 500/- |
| ஆயுள் சந்தா | - | ரூ. 1000/- |

சந்தாத் தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Cheque மூலம் அனுப்பலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank - Sri Bagavath Mission A/c. No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம். Bank A/c-ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 7904118421 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

# புதிய உலகம் படைப்போம்

ஸ்ரீபகவத் ஐயாவின் 'புதிய உலகம் படைப்போம்' புத்தகம், உலக சரித்திரத்தின் மாற்றத்திற்கும் முன்னேற்றத்திற்குமானது.

உலக மக்கள் அனைவரும் இப்புத்தகத்தின் கருப்பொருளான 'போரில்லா உலகம்' என்ற கருத்தை அங்கீகரித்தால் மட்டுமேகூடப் போதும்.

அனைவரின் ஆழ்மனதிலும் 'சமத்துவ உலகமே சிறந்தது' என்னும் எண்ணம் உள்ளது. இந்த எண்ணத்தை பிரகாசிக்கச் செய்வதே ஸ்ரீ பகவத் மிஷனின் பணி.

இப்பணிக்காக, **ஸ்ரீபகவத் ஐயா** அவர்களின் பிறந்த நாளான 12-9-2021 அன்று, வாய்ப்புள்ள ஊர்களிலெல்லாம் இப்புத்தக வெளியீடு, ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களின் பங்களிப்போடு துவக்கப்பட உள்ளது.

அன்றைய நாளில், கீழே உள்ளபடியான நிகழ்ச்சியை, Sponsor களின் உதவியோடு ஏற்பாடு செய்ய ஸ்ரீபகவத் மிஷன் கேட்டுக்கொள்கிறது. அதற்காக கீழே உள்ளபடி துண்டறிக்கையை அச்சிட்டு, நிகழ்ச்சியை நடத்த வேண்டுகிறோம். தேவைக்கேற்ப ஸ்பான்சர்களின் பெயர், நிகழ்விடம் போன்றவற்றில் மாற்றம் செய்து பயன்படுத்தலாம். அதிகப் பொருட் செலவில்லாமல், ஒரு சாமியானா அல்லது பெரிய நிழற்குடை அமைத்து, பேருந்து நிலையம், கடைவீதி, கல்வி நிறுவனங்கள், அலுவலகங்கள், தொழிற்சாலைகள் போன்ற இடங்களில், புத்தகத்தை விற்பனைக்கு வைத்தால் மட்டும் கூடப்போதுமானது.

வாய்ப்புள்ள இடங்களில், ஸ்ரீபகவத் மிஷனின் கருத்துகளை சிறப்பாக பேசக்கூடியவர்களை உரையாற்ற செய்யலாம்.

புத்தகம் அச்சிடுதலுக்கும் மற்ற செலவுகளுக்கும் 20 ரூபாய் ஆகிறது. 10 ரூபாய் செலவில் விற்கப்பட உள்ளதால், நன்கொடையாளர்களை ஸ்ரீபகவத்மிஷனுக்கு அறிமுகப்படுத்த வேண்டுகிறோம்.

ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அவரவர் புத்தகத் தேவையை உடன் தெரிவித்தால், அச்சிட்டு அனுப்பும் வேலைகளை விரைந்து செய்து 12-9- 21 அன்று தயார் நிலையில் இருக்கலாம்.

**திண்டுக்கல் வாழ்க வளமுடன் ஹோமியோ சேவை மையம், ஆயிரம் பிரதிகளுக்காக ரூபாய் 20000/– அனுப்பியுள்ளதற்கு ஸ்ரீபகவத் மிஷன் பாராட்டுக்களைத் தெரிவித்துக்கொள்கிறது.**

**சேலம் ஸ்ரீபகவத் மிஷனும்**
**திண்டுக்கல் வாழ்க வளமுடன் ஹோமியோ சேவை மையமும்**

இணைந்து நடத்தும்

## "புதிய உலகம் படைப்போம்"

**புத்தக வெளியீட்டு விழா**

நாள் : **12–09–2021** நேரம் : **காலை 11.00 மணி**

இடம் : **வாழ்க வளமுடன் ஹோமியோ சேவை மையம்,**
3, வாழ்க வளமுடன் தெரு, திண்டுக்கல். செல் : **91 50 30 29 04**

**உலகம் சமநிலை பெறவே, உயர்வு–தாழ்விலா நிலை வேண்டும்.**

மனிதரின் முக்கியத் தேவைகள் உணவு, உடை, இருப்பிடம். உலகில் பல கோடிப் பேர் இம்மூன்றிற்காகவும் பெரும் போராட்டத்துடன் வாழும்போது, சிலர் மட்டும் இவற்றுக்காகச் சிரமமின்றி, குற்ற உணர்வின்றி வாழ்ந்து வருகிறோம். அடிப்படை வசதிகள்கூட இல்லாத எவருடன் பேசினாலும் அவர்கள் கதை சோகக் கதையாகவே உள்ளது. **'அது அவரவர் கர்மவினை'** என்று விட்டுவிடாமல், நம் வாழ்நாளில் ஏதேனும் செய்ய வேண்டும் என்று நினைக்கும் நல்லவர்களின் எண்ணங்கள் இப்புத்தகத்தில், ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் வழியாக சமுதாயத்திற்கு தரப்பட்டுள்ளது.

நம் குடும்ப உறுப்பினர் ஒருவருக்கு நலக்குறைவு ஏற்பட்டால், அவர் நலம் பெற எவ்வளவு கடுமையாக முயற்சி செய்கிறோம். **நலமின்றி இருக்கும் நம் சமுதாயத்தை** சரிப்படுத்தவிருக்கும் சிறு புத்தகமே **'புதிய உலகம் படைப்போம்'.**

**இதுவரை 'நான் எனக்காக வாழ்ந்ததில் தவறில்லை; நான் எனக்காக வாழ்வதிலும் தவறில்லை; நாம் நமக்காகவும் வாழ்வோமே!'**

10 ரூபாய் செலவில் இந்த உலகத்தையே சிறந்ததாகச் செய்ய முடியும் என்பதே இச்சிறு புத்தகத்தின் செய்தி. படிப்பவர்கள் எல்லாம் இப்புத்தகத்தின் கருத்தை மனதளவில் அங்கீகரித்து, பலருக்கு தெரிவித்தால் மட்டும் போதும்.

அடுத்த நாட்டை நம்முடையதாக்கிகொள்வதே வீரம் என்று மூளைச்சலவை செய்யப்பட்டிருக்கிறோம் என்பதுகூடக் தெரியாமல் வாழ்ந்து வருகிறோம். போரில்லா நல்லுலகம் மட்டுமே மனித சமுதாயத்தின் ஒரே வெற்றியாகும். இதைச் செய்துவிட்டால் மனித குலத்தின் மற்ற செயல்கள் அனைத்தும் வளர்ச்சியை நோக்கியதாகவே இருக்கும். சமத்துவ உலகத்தின் ஆணிவேர் இதுவே.

அனைத்து நாட்டு மக்களும் முழுமையாக அவரவர் தலைமையை, போர் எண்ணத்தைத் கைவிட வலியுறுத்தச் செய்வதே இப்புத்தகத்தின் கரு. இந்த ஒன்றைச் செய்தாலே அனைத்துப் பிரச்சினைகளுக்கும் தீர்வு கிடைக்கும்.

இப்புத்தகத்தின் கருத்து செயலுக்கு வரும்போது, 46,700 கோடி ரூபாய் செலவில் நம்நாடு வாங்கவுள்ள 83 தேஜஸ் போர் விமானங்கள் சுற்றுலாவிற்கு மட்டுமே பயன்படும்.

அன்னதானம் செய்தல், மருத்துவ உதவி செய்தல், கோவிலுக்கு நன்கொடை தருதல் போன்றவை தேவையானதுதான். இது போன்ற உதவிகள் செய்தால், அது முழுமையான உதவியாக இருக்காது. அப்போதைய தேவைக்கான உதவியாகவே இருக்கும். ஆகவே மேலும் மேலும் தேவை இருந்துகொண்டே இருக்கும். புதிய உலகம் படைப்போம் புத்தகத்தின் கருத்து செயலுக்கு வரும்போது யாரும் யாருக்குமே இதுபோன்ற உதவிகள் செய்ய வேண்டியிருக்காது. பசித்தவருக்கு அவ்வப்போது உணவு தருவதை விட, அனைவருக்குமே எல்லாமே எப்போதுமே கிடைக்கச் செய்யலாம். ஏழைகளே இல்லாமல், ஏற்றத்தாழ்வுகள் இல்லாமல், ஈவோர்-இரப்போர் இல்லாமல் செய்யக்கூடியது 'புதிய உலகம் படைப்போம்' புத்தகத்தின் சாத்தியச் சிந்தனை.

பென்னிகுயிக், அவரது நாட்டில் இருந்த அவரது சொத்துக்களை விற்று, கொண்டு வந்த பணத்தில், பெரியார்அணையைக்கட்டியதால் இன்று அவருக்கு மணிமண்டபம் கட்டி இருக்கிறார்கள். அதுபோல் 'புதிய உலகம் படைப்போம்' புத்தகத்தின் கருத்துகள் செயலுக்கு வரும் போது, ஸ்ரீபகவத் ஐயா நினைக்கப்படுவார்.

தேனீர் குடிக்கும் செலவில் தேவையான உலக மாற்றத்தைக் கொண்டுவரவிருக்கும் இப்புத்தகத்தை படிப்போம்; பரப்புவோம். வாழ்கவளமுடன்.

அன்புடன்,

**ஸ்ரீ பகவத் மிஷன்,** **சேலம். செல் : 99942 05880, 97871 65555**

# அனைவருக்கும் ஓர் அன்பான வேண்டுகோள்



Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2021-2023
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்.

ஸ்ரீபகவத் மிஷன் மீதும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மீதும் தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட நமது குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் மிஷனில் வருவாய் ஈட்டும் நோக்கத்தோடு எந்தச் செயலும் செய்வதில்லை.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் ஞானத் தெளிவை உலகம் முழுவதும் கொண்டு செல்ல வேண்டும் என்பது மட்டுமே நமது நோக்கம்.

இதன் காரணமாகவே ஐயாவின் அனைத்து நூல்களையும் மாத இதழ்களையும் இலவசமாக Download செய்து கொள்ளும் வசதியையும் குறைந்த விலையில் ஐயாவின் நூல்களையும் வழங்கி வருகிறோம்.

இது அனைவருக்கும் பயனுள்ள வகையில் இருக்கும்.

மேலும் ஐயாவின் ஆலோசனைப்படி தலைநகரமான சென்னையில் நமது ஸ்ரீ பகவத் பவன் அமைப்பதற்கான முயற்சியையும் செய்துவருகிறோம்.

மாதத்தில் பாதி நாட்கள் ஐயா சென்னையிலும் பாதி நாட்கள் சேலத்திலுமாகத் தங்கியிருப்பார்கள்.

ஸ்ரீபகவத் மிஷனைப் பொறுத்தவரையில் நாம் இரண்டு வகையான செயல்பாடுகளோடு பயணித்து வருகிறோம்.

1) ஐயா வழங்கும் ஞானத்தை உலகம் முழுவதும் எடுத்துச் செல்வது.
2) சென்னையில் ஸ்ரீபகவத் பவனை உருவாக்குவது மற்றும் ஸ்ரீபகவத் மிஷன் – ஸ்ரீபகவத் ஐயாவுக்கான பராமரிப்பு உட்பட அனைத்து அன்றாட நிர்வாகச் செலவுகளையும் எதிர்கொள்வது.

தற்போது புரவலர்களாக இணைந்து மாதம்தோறும் நிதி வழங்குபவர்களின் உதவியால் இதனை ஓரளவுக்கு எதிர்கொண்டு வருகிறோம். ஆனால் நாம் எதிர்கொள்ளும் செலவுகளுக்கு இது மிகவும் பற்றாக்குறையாகவே உள்ளது.

நமது அனைத்துச் செலவுகளையும் முழுமையாக எதிர்கொள்ளவும், சென்னை பகவத் பவன் அமைக்கவும், இதுவரை பெற்ற வட்டியில்லாக் கடனை திரும்பச் செலுத்தவும் ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் ஆகிய நம் அனைவரின் பங்களிப்பும் மிகவும் அவசியம்.

ஐயா மீது ஈடுபாடு கொண்ட நாம் அனைவரும் எளிதான ஒரு சிறிய பங்களிப்பை மட்டும் வழங்கும் பட்சத்தில் இந்த இரண்டாவது அம்சப் பிரச்சினை எளிமையாகிவிடும்.

இதனால் நமது முழுக் கவனத்தையும் முதலாவது முயற்சியை நோக்கி மட்டுமே வைத்துக்கொண்டால் போதும்.

சிறுதுளி பெருவெள்ளம் என்ற வகையில் நாம் அனைவரும் மாதம்தோறும் ரூபாய் 500/– வழங்கும் பட்சத்தில் நமது முழு முயற்சியும் வெற்றி பெறும்.

எனவே ஈடுபாடுகொண்ட உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் மாதந்தோறும் வழங்கி தங்களது பங்களிப்பை உறுதி செய்திடுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

(ரூ.500க்கு அதிகம் வழங்க விரும்புவோர் தங்கள் குழந்தைகள் பெயரிலும் வழங்கலாம்.)

ஸ்ரீ பகவத் மிஷன் Account HDFC Bank & SBI Bank ல் உள்ளது. இவற்றில் எதில் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

1) Google pay - +918531036977
2) **Sri Bagavath Mission**
   Hdfc bank A/c No. - 15907620000075
   NEFT IFSC - HDFC0001590
3) **Sri Bagavath Mission**
   SBI Bank A/c No. - 31784345329
   IFSC Code - SBIN0012772

அன்புடன்,
**ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.**
அனைவருக்கும் நல்வாழ்த்துகளுடன்
**ஸ்ரீ பகவத்,**
**Dr.N. கைலாசம், K.S. ஜீவமணி, V.A.P. சரவணன்**